உ

முருகன்றுணை.







# சிவகிரி வலம்புரி விநாயகர்,

# பதிகம்.



திருநெல்வேலி ஜில்லா சிவகிரி,
திரு. அருணாசலப்புலவர் அவர்கள் குமாரர்,
திரு. மாகாலிங்கப்புலவர் அவர்களால்,
இயற்றப்பெற்று,

சிவகிரி கிராமமுனிசீபு.
திருவாளர் சி. சர்க்கரையப்பபிள்ளை அவர்கள்,
வேண்டுகோளின்படி,

ஸ்ரீவில்லிபுத்தூர் கருணாநிதி அச்சாபீஸில்,
பதிப்பிக்கப்பெற்றது.
1928.

உ

முருகன்றுணை.







# சிவகிரி வலம்புரி விநாயகர்

# பதிகம்.



திருநெல்வேலி ஜில்லா சிவகிரி,

திரு. அருணாசலப்புலவர் அவர்கள் குமாரர்,

திரு. மாகாலிங்கப்புலவர் அவர்களால்,

இயற்றப்பெற்று,



சிவகிரி கிராமமுனிசீபு.

திருவாளர் சி. சர்க்கரையப்பபிள்ளை அவர்கள்,

வேண்டுகோளின்படி,

ஸ்ரீவில்லிபுத்தூர் கருணாநிதி அச்சாபீஸில்,
பதிப்பிக்கப்பெற்றது.
1928.

# முகவுரை.

பல்வளனும் பலகலையும் ஒருங்கேசெறிந்த பாண்டி நாடாகிய பழம்பதியின் கண், ஓர்புடைதிகழும் சிவகிரி யெனும் நன்னகரில், இலங்கும் வலம்புரிவிநாயகர்மீது இந்நகர் அருணசலக்கலைவலான் அருந்தவப்புதல்வன் **மகாலிங்கப்பாவலான்** புனைந்த பதிகப்பாமாலையைப் பார்த்தேன் அளவிலாஆனந்தம் பெற்றேன். நான்பெற்ற இன்பம் வையகமெலாம் அடையக்கருதினேன். பனுவல்கள், சொல்நயம், பொருள்நயம் பொலிந்து, தமிழ்தினு மினிய தொடர்களால் அமைக்கப்பெற்றிருக்கின்றன.

" பிறந்தோருறுவது பெருகிய துன்பம்
பிறவாருறுவது பெரும் பேரின்பம் "

என, மணிமேகலை யாசிரியன் கூறியாங்கு, பிறப்பு என்னும் நீங்காத பிணியைப் போக்கிப் பிறவாமை யென்னும் பேரின்பமெய்துதற்கு இந்நூல் உண்மைப் பத்தியை விளைவிக்குமென பதிகச்சிந்தாமணிப் பாமாலை ஆனதுபற்றி இத்திருப்பதிகத்தைத உள்ளன்புடன் ஓதி நின்மலனாகிய அவன் திருவருளை யடைவோமாக.

சிவகிரி
1928

சோ. சண்முகம்பிள்ளை,
சிவகிரி.

## சிவகிரி அ. சுப்பிரமணியபிள்ளையவர்கள் இயற்றியது.

### அறுசீர்க்கழிநெடில்.

ஞானிலத்தினனிவளஞ்சேர் சிவகிரிவாழ் வலம்புரி
விநாயகற்கே
மானுடத்தின் வரும்பயன் பெற்றிட மகாலிங்க
நாவல்லோன் யார்க்குந்
தேனினுமேதித்திக்கச் செவிகளுக்கச் செவிவழியே
சென்றுபுக்கு
மானதத்துந்தித்திக்கச் சொன்மலர்ப்பாப்பதிகமன்பாய்
வனைந்திட்டானே.

## சிவகிரி சு. அருணகிரியாபிள்ளையவர்கள் இயற்றியது.

### அறுசீர்க்கழிநெடில்.



பணிப்பதிகத்தடச் சிவகிரிக்கண் வலம்புரியேரம்பற்குத்
தெய்வக்
கனிப்பதி கந்தக்கடவுளடி துதி மகாலிங்கக் கவிஞன்
திவ்ய
இனிப்பதிகந் தரும்படிக்குச்சுவை யிரண்டுமினிதாக
விசைத் தேதென் சொற்
றனிப்பதிகந்தனைச் சொற்றான் கற்றோர்க்கு முவகை
தருந்தகைத்தாய் மன்னே.

நெற்கட்டுஞ்செவல் ஜமீன் கூடலூர் மிட்டா, கூடலூர்
கிராமம் கிராம முன்சீபு,

## நவநீதகிருஷ்ணபிள்ளை அவர்கள்

## இயற்றியது.

சீர்பெருகுஞ் சிவகிரியாந் திவ்விய நகர்ப்பதிதனிலே
சிவனைமுன்னு

னோர்பொழுது வலஞ் செய்து ஒப்பற்ற கனிபெற்ற
உண்மைதோன்ற

ஏர்பெருகு பெயர் பெற்ற வலம்புரி வினாயகன்
மேலிசைத்தான்பாக்கள்

பார்புகழுமகாலிங்கப் பாவலவனிதைப் படிக்கப்
பலனுண்டாமே.



உ

சிவமயம்.



# சிவகிரி வலம்புரி விநாயகர்,

# பதிகம்.

## கணபதிகாப்பு.

### வெண்பா.

நலம்புரியும் பொன் பூ நகுசிவகிரிக் கண்
வலம்புரி விக்னேச வரன்மேல்—இலங்குபதி
கம்புகலவேயக் கடவுளிருபாதமல
ரெம்புகலதாகுமினிதே.

### ஆசிரியம்.

திருமாது மார்பிலகலாது குடிகொண்டுவளர் செங்கமல
நயனமாலுஞ்

செகதலமெலாஞ் சிட்டிசெய்துவரு நான்மறைத் திசை
முகக்கோவுமைந்து

தருவுடைய விந்த்ரனுஞ் சித்தர்கந்தருவரோடு சந்தி
ராதித்தர் முதலாஞ்
சகலதேவருநினது சன்னிதியிலேவந்து சரணமே
சரணமென்று
பொருவில்முற் பூசனைசெய் துன்னருள் ளுற்றுங்கள்
புரிசெயல்கள் முற்றுறுவரோற்
புனிதனே யுனையனைய தெய்வங்களுண்டுமோ புகவி
லேற் கருள் செய்குவாய்
மருமருவுபூம் பொழில்களெழில்பெறச் சூழ்ந்துலவு
வளமருவு சிவகிரியினில்
வல்லபை மணாளதவசெல்வக் குணாள நல்வலம்புரி
விக்னேசதேவே (1)

கோலாகலத்துடன் பேரின்பமிதுவெனக் கொண்டுதவு
தந்தைமகிழ்வாய்க்
குளறுமென்மழலை மொழியமுது செவிபருகிடக்குறு
நகைபொடிப்ப மெய்யின்
மேலாக நனிபுள கெழப்பனிவரைப்பசியமென்கொடி
படர்ந்து மேவும்
விறற்றோட்கு வட்டிடைத்துடியடிகளான்மிகமிதித்துத்
துவைத்து மார்பிற்
காலாகமதமொழுக விளையாடு நீள்புழைக் கரபுகர்முகக்
களபமே

கடையேன் மயற்காடு வேரோடு பிடுங்கிக்களைந்தெறிந்
தாண்டருளுவாய்
மாலானதேவன் மருகாபெருகு வாவிசூழ்வளமருவு
சிவகிரியினில்
வல்லபை மணாளதவ செல்வக்குணாள நல்வலம்புரி
விக்னேசதேவே (2)

கல்விப்ரசங்கமு நல்லவர்கள் சங்கங்கலந்துறவுசெய்
நேசமுங்
கருதுநியமாதியும் நீதியே யாதியாங்காருண்ய தயவுமே
யின்
சொல்லுமிகு பொறுமையு நல்ல கவிவாக்குளத்தூய்மை
யும் வாய்மைதவமுஞ்
சுகசவுக்கிய நித்யவாசமும் பத்திபுரி சுகுணமெஞ்ஞான
தெளிவும்
இல்லையென்றுதவு வண்மையு முண்மைநெறியெல்லா
மெனக்கருளுவாய்
எர்கொள்வயறேறும் வளையார வொளியாற்குமுதவிதழ்
விரிந்தின் மதுக்கான்
மல்குமைந் தருவண்மை கற்பதெனவே சோலை
வாணிறுயர் சிவகிரியினில்
வல்லபை மணாளதவ செல்வக்குணாள நல்வலம்புரி
விக்னேசதேவே. (3)

கொண்டல்வண்ணன் கண்ணிடந்து முண்டகமென்று
கொண்டு பூசித்த தாளிற்

குளிர்மலர்கள் கொண்டருச்சித்துத் துதித்தன்புகூர்ந்து
சிவசிவவென்றுநான்

பண்டைநாட் செய்தவத்தா பதச்சிறுமறைப்பாலன்
மார்க்கண்டற்கு மேற்

பதவிதந்தென்றுமே யொன்றுபோல் வாழ்க வருள்
பாலித்த தன்மை யென்னத்

தண்டபாசங்கொண்டு சண்டன்வந்தணுகு முன்றமி
யனேற் கஞ்சலென்றாள்

சரவணோற்பவகுமர முருக சோதர வரத தந்தாவளா
னனத்தாய்

வண்டரள நந்துதரம்வந்து நிலவொளி செய்வயல்
வளமருவு சிவகிரியினில்

வல்லவைமணாள தவசெல்வக்குணாள நல்வலம்புரி
விக்னேச தேவே. (4)

இத்தனையெனக் கணக்கில்லாது திமிரங்களைத் தனை
யனந்தமாக

வெங்கும் பரந்தண்டகோடி பலபுவனங்களெண்டி
சைகள் சூழ்ந்ததேனும்

அத்தனையுமே யிலகுமொருசுடர் முனிற்குமோ
வதுபோலவே யனுதினம்

அடியேன் செய்தீவினை யனந்தமது நின் கருணையா
மொளி முன்னிற்குமோ தான்

முத்தமிழ்க் குறுமுனிக்குத் தமவரங் கடரு முதல்வனே
முக்கண்ணுடையாய்

மோனவானந்த தவிஞான யோகர்க்கருள் செய் மூர்த்தி
நீயென்னையன்பு

வைத்திரச் சித்தருள் செயித்தருணமே வந்து வளமருவு
சிவகிரியினில்

வல்லபை மணாள தவசெல்வக்குணாள நல்வலம்புரி
விக்னேச தேவே. (5)

காரிய கடத்திற்கு மண்ணதே காரணங் கனகமணி
யணிகளுக்குங்

காரணமதா மூலகம்யாவுக்குமே மூலகாரணக்கடவுளே
யென்



றாரணமனைத்துஞ் சொலாகமமனைத்து நூல்யாவு
முனையே மொழியுமால்

அவனியோடு கானீருமங்கியே முதலாயவைம் பூதநிலையு
நீயே

நாரணனு நான்முகனு நான்[illegible] பொருளை[illegible]
[illegible]ங் கண்டுதொழுதற்கு

நண்ணுதற்கரிதான [illegible]ண்ணவே நின்னடிகணம்பினேற்
கருள்வதென்றோ



வாரணி தனக்கௌரி மடியில்விளையாடி மகிழ்வளமருவு
சிவகிரியினில்

வல்லபை மணாளதவ செல்வக்குணாள நல்வலம்புரி
விக்னேசதேவே. (6)

பணவரவ கங்கணந்திகழவணிதரு பெரும் பாசாங்கு
சக்கரமதும்

பங்கசக் கிண் கிணிக்காலுமொலிகால் பொற்படாம்
புனைந்திலகு முகமும்

மணிகொள் குண்டல முறச்செவியும் லம்போதர
வகுப்புட ஞன்றவாயும்

வடவரை நிகர்த்ததட வலயவாகொடு சடாமகுடமுங்
கருணைவிழியும்

அணிகொணூன் மார்புந் தயங்கவே யிணையிலாவாகு
வாகன மீதில்வந்

தடியேற்கருட் காட்சி காட்டி மருள்வீட்டியே அடிமை
கொண்டாளையனே

மணமருவு மாங்கனியின் மது நதி கணிறை பழன
வளமருவு சிவகிரியினில்

வல்லபை மணாளதவ செல்வக்குணாள நல்வலம்புரி
விக்னேசதேவே (7)

வண்மைதரு சங்கநிதி பதுமநிதி மணிவெள்ளை
வாரணந்தரு வைந்துடன்

வாழ்ந்தமுந்த போகமுறு நாகநாடரசுபுரி வாசவன்
பதமும் வேண்டேன்
பண்ணுலவு வேய்ங்குழலினானினமு முருகவிசை பயிலு
மணிவண்ணனுதவும்
பயோததியின் மீதுரகசயன நல்லின்ப சுகபதவியுஞ்
சிறிதும் வேண்டேன்
கண்ணதிரு நான்குடைய தண்ணளின மேலுளான்
கதியுடன்மற்றும் வேண்டேன்
கருதரியவானந்தவுனதுபதம் வேண்டினேன் கர்த்தனே
கருணைபுரிவாய்
மண்ணுலக மாது புனைமாபிலணியாரமென வளமருவு
சிவகிரியினில்
வல்லபைமணாளதவ செல்வக்குணாள நல்வலம்புரி
விக்னேசதேவே. (8)

பற்றி வருகாற்றினா லெற்றுண்ட சருகுபோற் பாம்பின்
வாய்த்தேரை போன்மாற்
பாசத்தினுட்பட்டு நெஞ்சுழன்ற யருவேன் பத்தனே
னறியாது செய்
குற்றமெத்தனையிருந்தாலுமக் குற்றமே குணமதாய்க்
கொண்டருளருட்
கொண்டலே கொண்டவிடை யொருபிறை முனைத்
தாங்கோர் கொம்பினிற்பூண்புனைந்து

நற்றவப்புதல்வனே யெனநுதற் பொட்டிட்டு நயனமை
யிட்டெடுத்து
நனிமுத்தமிட்டு மடியிட்டு மோந்துச்சி பொன்னகு
மணித்தொட்டிலிட்டு
மற்றுமலைமாது தாலாட்டி யுளுவப்பொடு வளர்த்திடும்
சிவகிரியினில்
வல்லபை மணாளதவ செல்வக்குஞ்சுள் நல்வலம்புரி
விக்னேசதேவே. (9)

சித்தசித்தீசனுந் தத்வவடிவே பழஞ் செழுமறைப்
பொருளின் முடிவே
தேகாதி மூன்றுக்கதீதனே நாதனே சேதனபோற்றி
போற்றி
அத்தனேயமலனே முத்தனே முதல்வனே ஐயனே
மெய்யருண
ஆதியே சோதியே நாதாந்த தற்பராவைங்கரா
போற்றி போற்றி
நித்தனே கர்த்தனே யுத்தமர் தமக்கு நனிநேயனே
சித்திமருவும்
நீதனே போதனே போது நேர்பாதனே நிராமயா
போற்றி போற்றி
மத்தகசமுகவனே சுத்த குணபகவனே வந்தருள்செய்
சிவகிரியினில்

147

வல்லபை மணாளதவ செல்வக்குணாள நல்வலம்புரி
விக்னேசதேவே. (10)

---

## வாழ்த்து.

தலம்பலவும் வளஞ்சிறக்க,மதிதொறு மும்மாரிபெய்து
தழைக்க நாளும்

நிலம்புரக்கும் மன்னர் செங்கோல் நெறியோங்க நான்
மறை கணிதமு மல்க

நலம்புரியுமோக மங்கள் பெருகிடுக சிவகிரியூர் நயந்து
மன்னும்

வலம்புரி விநாயகரின் னருள்வாழ்க வடியார்கள் வாழ்க
மன்னே.

